(௧௯)

சீட.—காங்கேயன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—அது, கங்கை மைந்தனென்ற நாமார்த்தத் தையே பொருந்தும்.

(௨௦)

சீட.—கார்த்திகேயன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—அறுமீன் காதலனென்ற நாமார்த்தமே ஆம்.

(௨௧)

சீட.—குகன் என்பதற் கருத்தமென்னை?

குரு.—மலைக்குகைகளில் திருக்கோவில்கொண் டிருப் பவனெனச் சிலர் கூறுவர். அவ்வாறு மாகலாம்.

குஹா என்னும் வடசொல் குகையெனப்படும். அது, தகராகாசமெனவாம். தகரமாகிய இதய புண்ட ரீகத்திற் சிதாகாசமாகிய வித்தை யிருத்தலின், அது *தகரவித்தை யென்றுஞ் சொல்லப்படும். இந்தத் தகரவித்தை யஜுர்வேதத்துப் பிருஹதாரண்யகோபநிஷத் தில் இனிது விளக்கப்பட்டிருக்கிறது. இந்தக் குகையி

---

* இந்தத் தகரவித்தையை நன்கு விளக்கும்பொருட்டே தகராலயரகசிய மெனுமொரு நூலினை இந்நூலாசிரியர் செய்துள்ளார். அதனுரை, சதானந்தசாகர மென வேதம் முதலிய பலதிறப் பெரும்பிரமாணங்களாலும் யுத்தி அனுபவங் களாலும் ஒரு பெருநூலாய் விளங்குகின்றது.